*Post-Graduate Studies (Medical)*

*** 1316** *Q.*—**SRI P. G. MANICKAM** : கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) சென்னை ராஜ்யத்திலுள்ள வைத்திய கழகங்களின் பட்ட பிற்கால படிப்பில் ஈடுபடும் வைத்திய மாணவர்களுக்கும் மாணவிகளுக்கும் ஆராய்ச்சி வசதியளிக்கும் திட்டத்துக்காக ராக்பெல்லர் தரும நிதி ஸ்தாபனத்திலிருந்து உதவி அளிக்கப்பட்டிருக்கிறதா ?

(இ) அவ்வாறிருப்பின், எவ்வளவு தொகை உதவியாகக் கிடைத்தது ?

(உ) எந்தெந்த வைத்திய கழகங்களுக்கு இவ்வுதவி அளிக்கப்பட்டன ?

**THE HON. SRI M. A. MANICKAVELU** : (அ and (உ).—The Indian Council of Medical Research is getting fellowships from the Rockfeller Foundation and transmitting them to the post-graduate students in M.Sc. and Ph.D. in Anatomy in the Institute of Anatomy. Stanley Medical College, Madras.

(இ) Rs. 84,822.73 during the period from January 1954 to January 1959.

*Mavuthu Mountain (disreservation of)*

*** 1317** .—**SRI M. K. MARIAPPAN** : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) அரூர் தாலூக்காவில் மாவுத்து (unreserved) ரெவின்யூ மலையாக இருந்து வந்ததை கடந்த வருஷத்தில் பாரெஸ்டாக எடுத்துக் கொண்டதற்காக அப்பகுதி மலைச்சாதி விவசாயிகள் மீண்டும் அதை ரெவின்யூ மலையாக ஆக்கிக்கொடுக்கவேண்டுமென மகஜர் கொடுத்தார்களா ?

(இ) அப்படியானால், அதன்பேரில் என்ன நடவடிக்கை எடுக்கப் பட்டது ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM** : (அ) Yes, Sir.

(இ) The matter is under consideration.

**SRI M. K. MARIAPPAN** : கனம் தலைவர் அவர்களே, இந்த மலையை ரெவின்யூ மலையாக இருந்ததை பாரெஸ்டாக ஆக்கினதினால் அங்குள்ள மலைவாசி விவசாயிகள் விவசாய சம்பந்தமாக ரொம்பவும் பாதிக்கப்படுகிறார்கள் என்பது பற்றி சர்க்கார் பரிசீலனை செய்து அதை மீண்டும், பாரெஸ்டு என்பதை நீக்கி, ரெவின்யூ மலையாக ஆக்க சர்க்கார் முயற்சிக்குமா ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM** : அதுதான் போடப்பட்ட கேள்வி. இந்த விஷயம் அரசாங்கத்தின் பரிசீலனையில் இருக்கிறது என்று நான் சொன்னேன்.

*Village Panchayat (appointment of Secretary)*

*** 1318** *Q.*—SRI V. K. KOTHANDARAMAN (on behalf of **SRI A. R. MARIMUTHU**) : கனம் முதல் அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) கிராமப் பஞ்சாயத்துக்களுக்கு, கிராம அதிகாரிகளைச் செயலாளராக வைக்கவேண்டும் என்ற சர்க்கார் முடிவுக்கு எதிர்ப்பு ஏதேனும் உள்ளதா ?

(இ) அப்படியானால், அரசாங்கத்தின் முடிவென்ன ?